உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சைவசமயாசாரியர்களில் ஒருவராகிய

# திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகத்

# திருமுறைகள்.

வித்வான் - காஞ்சீபுரம்

**சபாபதிமுதலியாரவர்கள்**

ஆராய்ச்சிசெய்தபிரதிக்கிணங்க

புரசை - அஷ்டாவதானம்

**சபாபதிமுதலியாரவர்கள்**

மாணாக்கர் - தண்டலம்

**பாலசுந்தரமுதலியாரவர்களால்**

பார்வையிடப்பட்டு

மாடம்பாக்கம்

**வாசுதேவபிள்ளையவர்களால்**

சென்னை

**பா-சோமையாரவர்களது**

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சுபானு ௵ பங்குனி ௴.

உ

சிவமயம்.

# அட்டவணை.

| பதிகம். | பக்கம். |
|---|---|

அட்டவணை முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# ஆளுடையபிள்ளையார்

## சரிதம்.

---

பிரமபுரம் - வேணுபுரம் - புகலி - வெங்குரு - தோணிபுரம் - பூந்தராய் - சிரபுரம் - புறவம் - சண்பை-காழி - கொச்சைவயம் - கழுமலம் - என்னும் பன்னிரண்டு திருநாமங்களுள்ளதாய்ச் சோழவளநாட்டில் மிகுந்தவளப்பத்துடன் வீறிவிளங்கும் சீகாழிப்பதியில்வாழும் பிராமணகுல சிரேஷ்டராய்க் கவுணியகுலோற்பவராகிய சிவபாதவிரதயரும் அவர்மனைவி பகவதியாருஞ்செய்த தபோபலத்தினால் தோணியப்பர் அருள்செய்யத் திருவாதிரை நக்ஷத்திரத்தில் திருவவதாரஞ்செய்து ஆளுடையபிள்ளையாரென்னுந் திருநாமம்பெற்றுவளர்ந்து மூன்றுவயதானவளவில் சிவபாதவிரதயர் ஸ்நானஞ்செய்யச் செல்லும்போது அவருடனெழுந்தருளி அவர் தீர்த்தக்கரையி லிருக்கும்படிவைத்துத் தீர்த்தத்துக்குள் முழுகி அகமருஷண மந்திரஞ்செபித்து எழுவதற்குமுன் பிள்ளையாருக்குப் பண்டையுணர்ச்சியுண்டாய்ச் சுவாமியினுடைய திருவடியைப்பிரிந்திருக்கு மனவருத்தத்தையுட்கொண்டு பிதாவைக்காணாமையால் குழந்தை விசனப்படுகின்றதென்னுங் குறிப்புத்தோன்றத் தோணியப்பர் வீற்றிருக்கும் ஆலயத்தின் சிகரத்தைநோக்கி "அம்மேயப்பா" வென்று கண்ணீர்பெருகவிட்டுக்கொண் டிருக்கக்கண்டு தோணியப்பர் திருவுளமிரங்கிக் கிருபைகூர்ந்து ரிஷபவாகனத்தின்மேல் பார்வதிசமேதராயாரோகணித்துக்கொண் டெழுந்தருளிவந்து திருமுலைப்பால் கொடுக்கும்படி பார்வதிதேவியாருக்குக் கட்டளையிட்டருளப் பார்வதிதேவியார் பிள்ளையார் சமீபத்தில்வந்து பொற்கிண்ணத்தில் திருமுலைப்பாலுடன் ஞானமாகிய அமுதமுங்கலந்து கொடுத்தருள உண்டு அழுகை தீர்ந்திருக்கையில் பிதாவந்து பார்த்துப் பால்கொடுத்தவர்கள் யாரென்று பயமுறுத்துகையில் இவர்கொடுத்தாரென்று கைவிரலாலசுட்டித் தோடுடையசெவியனென்னுந் தேவாரமோதிச் சுவாமியைக்காட்ட அவர் ஆனந்தம் அடைந்தனர்.

அன்றுமுதல் ஆளுடையபிள்ளையார் திருஞானசம்பந்தசுவாமிகளென்னுந் திருநாமங்கொண்டு ஆலயத்திற்சென்று தரிசித்துப் பிதாவானவர் தம்தோளிலேந்திக்கொண்டுவரத் திருமாளிகையிலெழுந்தருளியிருந்து பின்பு திருக்கோலக்கா என்னுந் தலத்துக்கெழுந்தருளித் திருக்கரங்களையொத்தித் தேவாரமோதுகையில் சுவாமி கிருபைகூர்ந்து பொற்றாளங்கொடுத்தருள பெற்றுக்கொண்டு வணங்கித் தேவாரமோதித் துதி

செய்து முன்போலத் திருமாளிகையில் வந்திருந்து காலந்தோறுந் தோணியப்பார் சந்நிதிக்கெழுந்தருளித் தேவாரமோதித் துதிசெய்து கொண்டு வீற்றிருக்கும்போது சுவாமியினுடைய தாயார் ஜனனக்ஷேத்திரமாகிய திருநனிபள்ளியிலிருக்கும் பிராமணர்கள்வந்து சுவாமிகளுடைய திருவடிகளைவணங்கித் துதிசெய்தார்கள். இவர்கள்மாத்திரமே யல்லாமல் மற்றப்பதியிலிருக்கும் பிராமணர்முதலாகிய சிவனடியார்கள் கூட்டங்கூட்டமாகவந்து தெரிசிக்க அவர்களுக்கெல்லாம் மனமகிழ்ச்சியுண்டாகும்படிச் சிறப்பளித்துக் கிருபைகூர்ந்திருக்கத் திருநனிபள்ளியிலிருந்து வந்தவர்கள் சுவாமிகளைத்தொழுது துதித்து நாங்களிருக்கும க்ஷேத்திரத்தில்வந்து பரமசிவத்தைத் தொழவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யத் திருவுள்ளமிசைந்தருளித் தோணியப்பாரைத் தரிசித்துத் தேவாரமோதித் துதிசெயது விடைபெற்றுக்கொண்டு திருநனிபள்ளியேயன்றி மற்ற க்ஷேத்திரங்களிலுஞ்சென்று பரமசிவத்தைத்தரிசிக்க வுடகொண்டு முன்போல் எழுந்தருளித் திருநனிபள்ளியிற்சோந்து பரமசிவத்தைத்தரிசித்துத் தேவாரமோதி அங்குவீற்றிருக்கும்நாளில திருத்தலைச்சங்காடு என்னும் பதியிலிருக்கும பிராமணர்கள் முதலானவர்கள வந்து சுவாமியைக்கண்டு தரிசித்துப் புகழ்ந்து தஙகள் திருப்பதிககு எழுந்தருளவேண்டுமென்ன அவர்களுடன் சென்றருளி ஆலயத்துள் சென்று சிவபெருமானைத்தரிசித்துத் தேவாரமோதித் துதித்து அங்கிருந்து திருவலம்புரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருமுல்லைவாயிலென்னுந் தலங்களிற்சென்று தரிசித்துத் தேவாரமோதி மீண்டு சீகாழிக்கெழுந்தருளி அங்கிருந்து புறப்படடுசசென்று திருமயேந்திரப்பள்ளி, திருக்குருகாவூ ருள்ளிடட தலஙகளிலு மின்னுஞ சமீபத்திலிருக்குந் தலங்களிலும்சேர்ந்து சுவாமியைத்தரிசிததுத் திருப்பதிகமோதிச சாற்றிச சீகாழியில்வந்து தோணியப்பாரைத் துதிசெய்துகொண்டிருக்கும் நாளில் திருநீலகண்டயாழ்ப்பாணர் பத்தினியாருடன் வந்ததைக் கேள்விப்பட்டுப் போயழைத்துக்கொண்டுவந்து தோணியப்பார் ஆலயத்தின் கோபுரவாயிலுககுச சமீபத்தில்போய்த்தரிசனஞசெயவித்துவந்து வேறேயிடங்கொடுத்து விருந்துசெய்வித்துபசரிக்க யாழ்ப்பாணநாயனார் சுவாமிகள் அருளிசசெய்த திருப்பதிகங்களை அடியேன் யாழிலமைத்து வாசிக்கும்படி கட்டளையிட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்யச் சுவாமிகள் மகிழ்ச்சியுடன் சம்மதித்ததினல் அன்றுமுதல் யாழ்ப்பாணர் திருப்பதிகங்களை யாழிலமைத்து வாசித்துக்கொண்டு சுவாமிகளை விட்டுப் பிரியாமலிருக்கையில நடராசமூர்த்தியைத் தரிசிக்கவேண்டுமென்கிற அன்புமேலிடச சிதம்பரத்துககெழுந்தருளி எழுநிலைக்கோபுரங்கண்டவுடன் விழுந்து பணிந்து உள்ளெழுந்தருளிப் பிரதட்சிணஞ்செய்து நடராசமூர்த்தியைத்தரிசித்துத் திருப்பதிகமோதி ஆனந்தபாஷ்பம்பெருகப் பரவசமடைந்து விடைபெற்றுக்கொண்டு அரிதிற்புறம்

போந்து அங்கு வசிப்பதற்கஞ்சித் திருவேட்களத்திற்சென்று பரமசிவ னைத் தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து விடைபெற்றுக்கொண்டு வந்து வசிக்குமிடம் அந்தத்தலமாக வுட்கொண்டு அங்கிருந்து நடராச மூர்த்தியைத் தரிசனஞ்செய்துகொண்டிருக்கும் நாளில்,

தில்லைவாழந்தணர் நடராசமூர்த்தியை அருச்சிக்கும்படியான பேறு பெற்றார்களேயெனனுங் கருத்துடன் ஒருநாள் சிதம்பரத்துக்கெழுந்தரு ளுகையில் தில்லைவாழந்தணர்கள் சிவகணங்களாயிருக்கக்கண்டு தரிசித்து யாழ்ப்பாணருக்குங் காண்பித்துச சிறசபைக்கெழுந்தருளி நடேசமூர்த் தியைத் தரிசிததுத் திருப்பதிகமோதித் துதிசெய்து விடைபெற்றுக் கொண்டு புறம்போந்து யாழ்ப்பாணர வேண்டுதலினால் அவர் அன்னை ஜனனபூமியாகிய திருஎருக்கத்தம்புலியூர முதலாகிய சிலதலங்களிற் சென்று சேர்ந்து முறைப்படி சுவாமியைத்தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து பின்பு திருமுதுகுன்றமென்கிற விருத்தாசலத்திற் சேர்ந் தருளி இறைவரை வணங்கித் திருப்பதிகமோதிச் சாத்திச சிலநாளங்கு வீற்றிருந்து புறப்பட்டுத் திருபபெண்ணாடகமென்னுந் தலத்திற்சென்று தொழுது திருப்பதிகமோதித் துதிசெயது அங்கிருந்து மெழுந்தருளித் திருவடிவருந்த மெல்லமெலலச்சென்று மாறன்பாடியென்னும் பதியில் சேரப் பொழுதுமறையவே அவவிடத்தில திருக்கூட்டத்துடன் வீற் றிருக்கையில திருவரத்துறையில் வீற்றிருக்கும பரமசிவம் ஆளுடைய பிள்ளையார் நடந்துவந்த வருத்தத்தைத் திருவுள்ளத்திற்கொண்டு முத் துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்ன முதலியவை கொடுத்தருள வேண்டுமென்று அப்பதியிலிருக்கும் பிராமணாகளுக்கும் அடியார்களுக் கும கனவில தெரிவிததருள அவர்களெலலாருங்கூடி ஆலயத்தில்வந்து பாாககும்போது பரமசிவம அருளிச்செயதபடி முத்துச்சிவிகை முத லானவைகளிருந்தமையால் மகிழ்ச்சியடைந்து அவைகளை யெடுத்துக் கொண்டு திருஞானசம்பந்தசுவாமிகளிடத்திற் கொண்டுபோய்ப் பரம சிவம் அருளிச்செய்ததையும் விண்ணப்பஞ்செய்யச் சுவாமிகள் பரம சிவத்தின் கட்டளையை மறுக்க அஞ்சி வணங்கி முத்துச்சிவிகையில் ஆரோகணித்துக்கொண் டெழுந்தருளித் திருவரத்துறையிற் சென்று சிவிகைவிட்டிழிந்து சிவசந்நிதியிற்போய் முறைப்படிவணங்கிப் பதிக மோதித் துதிசெய்து சிலநாள் அங்குவீற்றிருந்து மறுபடி சீகாழிக் கெழுந்தருளும்போது திருப்பழுவூர், திருவிசயமங்கை, திருவைகாவூர், திருப்புறம்பயம், திருசசேய்ஞலூர், திருப்பனந்தாள், திருஓமாம்புலியூர், திருவாழ்கொளிபுத்தூர், திருநாரையூர, திருக்கருப்பறியலூர் என்னுந் தலங்களில் சுவாமியைத்தரிசித்துத் தேவாரமோதித் துதிசெய்து சீகாழி யிற்போய்ச்சேர்ந்து தோணியப்பரைத் தரிசித்துப் பதிகமோதிச் சாத் திப் பிதா உபநயனஞ்செய்விக்க விசைந்து வேதமுதலிய கலைகளை யெல்

லாம் ஓதாதுணர்ந்து பஞ்சாக்ஷரப்பதிகம் அருளிச்செய்து துதிசெய்து அங்கிருக்கும்நாளில் திருநாவுக்கரசு சுவாமிகள் வருவது கேள்விப்பட்டு எதிர்கொண்டுபோய் அவர வணங்க அப்பரோ யெழுந்திருமென்று தமது இரண்டுகையினாலுமெடுத் துபசாரத்துடன் அழைத்துககொண்டுவந்து தோணியப்பரை யிருவருந் தரிசித்து அப்பர்சுவாமிகள் சிலநாளிருந்து சென்றருளினபின்பு திருஞானசம்பந்தசுவாமிகள் அங்கமர்ந்து காலங்கள்தோறுந் தோணியப்பரைத் தரிசித்துக்கொண் டிருக்கும்நாளில் திருமொழிமாற்று, திருமாலைமாற்று, திருவழிமொழி, திருவேகபாதம், திருஎழுகூற்றிருக்கை முதலிய சித்திரக்கவிப பதிகஙகளோதித் துதிசெய்து பின்பு மற்றத்தலங்களிலுஞ்சென்று தரிசிக்கத் திருவுளங்கொண்டு பிதாவுக்குத்தெரிவிக்க அவர் நானுங்கூடவே வருகிறேன் யாகஞ்செய்யுப பொருளும்வேண்டுமென்னச சம்மதித்துப் புறப்படுத் திருக்கண்ணார்கோயில், திருப்புள்ளிருக்கும்வேளூர், திருநின்றியூா, திருப்புன்கூர், திருமணஞ்சேரி, திருக்கோடிகா, திருமங்கலக்குடி, திருவியலூர், திருத்தேவன்குடி, திருஇன்னமபர், திருக்குரங்காடுதுறை, திருப்பழனம், திருஐயாறு, திருப்புலியூா, திருமழபாடி, திருககானூா, திருஅன்பிலாலந்துறை, திருக்கடைமுடி, திருமாந்துறை என்னும் தலங்களிலு மற்றுஞ் சிலதலங்களிலுஞ் சென்றருளிப் பரமசிவத்தைத் தரிசித்துத் திருப்பதிகமோதித்துதிசெய்து திருப்பாசசிலாசசிராமத்துக்கெழுந்தருளும்போது அங்குக் கொல்லிமழவனென்னும் ஒரு அரசன் மகளுக்குச சம்பவித்திருக்கும் முயலகனென்னும் குமரகண்டவலி அப்போதுகண்டு அது எவ்விதத்திலும் தீராமையால் மனவருத்தம அடைந்து அவன் சிவநேசமுள்ள சந்ததியனுதலால் அந்தக்கன்னிகையைச சிவாலயத்திற்கொண்டுவந்து போட்டுவைத்தான்.

அத்தருணத்தில் திருஞானசம்பந்தசுவாமிகள் எழுந்தருளுகின்றதைத் திருசசின்னவோசையினால் அறிந்து நகரத்தை யலஙகாரஞ் செய்யும்படி உத்தரவுசெய்து எதிர்கொண்டுபோய் வணங்கினன் சுவாமிகள் நகருககுள் எழுந்தருளிக் கோபுரவாயிலின்புறமபு முத்துசசிவிகையை விட்டிழிந்து பணிந்து ஆலயத்துக்குட்சென்று பிரதக்ஷிணஞ்செய்து சுவாமி சந்நிதானத்துககு எழுந்தருளும்போது அந்தக்கன்னிகை சவம்போலிருப்பதை நோக்கி யிது என்னவென்று வினவ அவ்வரசன் றொழுது என்னுடையபுத்திரி யிவளுக்குககண்ட முயலகநோய் தீராமையா லிங்குக்கொண்டுவந்தேனென்றான். அந்தவசனஞ் சொன்னவளவில கிருபைகூர்ந்து "துணிவளர்திஙகள் துளஙகிவிளங்க" என்னும் திருப்பதிகம் ஓதித் துதிசெய்தவளவில் அந்தக்கன்னிகை வியாதி நீங்கியெழுந்து தன்பிதாவின் அருகிற்போய் நின்றாள். அவ்வரசன்கண்டு ஆனந்தமடைந்து தன்மகளுடன்வந்து திருஞானசம்பந்தசுவாமிகள் திரு

வடிகளை வணங்கக்கண்டு கிருபைசெய்து பின்பு சிவசந்நிதிக்குள்போய்ப் பணிந்து திருப்பதிகமோதித் துதிசெயது விடைபெற்றுக்கொண்டுவந்து அந்ததலத்தில் சிலநாளமாந்திருந்து புறப்பட்டுத் திருப்பைஞ்ஞீலி, திருவீங்கோய்மலை, திருக்கொடிமாடசெஙகுன்றூர், திருகணா இந்தத் தலங்களிற்சென்றருளிப் பதிகமோதித் துதிசெய்து மறுபடி திருக்கொடி மாடச் செங்குன்றூரில்வந்து வீற்றிருக்கும்போது குளிகாலமணைய அக்காலத்தில் அங்கிருப்பவர்களுக்கு வருஷந்தோறுங் காணுகிற நளிர் சுரம் தம்முடன் வந்திருக்குந் திருககூட்டத்தாருககுங் கண்டதறிந்து அவ்வினைக் கிவ்வினையென்னும திருநீலகண்டப்பதிக மோதினவளவில் அந்தப்பிணியானது திருக்கூட்டத்தாரைவிட்டு நீங்கினது மன்றி அந்நா ட்டிலிருப்பவர்களையும் விட்டொழிந்தது பின்புசிலநாளங்குவீற்றிருந்து சுவாமியினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுத் திருப்பாண் டிக்கொடுமுடி, திருக்கருவூர், திருப்பராய்த்துறை, திருக்கற்குடி, திரு மூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி, திருஆனைக்கா, திருமயேந்திரப்பள்ளி, திருவாரூர், திருப்பாற்றுறை, திருநெடுங்களம, மேலைத்திருக்காட்டுப் பள்ளி, திருவாலம்பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச் சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருவெண்ணி, திருசசக்கரப்பள்ளி, திருப்புள்ளமங்கை, திருவாலந்துறை, திருநல்லூர், திருக்கருகாவூா, திருஅவளிவணல்லூர், திருப்பருதிநியமம், திருஆலூர்ப்பசுபதீச்சரம், என்னுந் தலங்களிற்சென்று பரமசிவத்தைத் துதிசெய்து பதிகமோதி விடைபெற்றுக்கொண்டு திருவலஞ்சுழிக் கெழுந்தருளிச் சுவாமியைத் தரிசித்துப் பதிகமோதித் துதிசெயது அங்குவீற்றிருக்கும்நாளில் முதிர் வேனிற்காலம் வந்தது. அப்படியிருக்கச் சுவாமிகள் திருச்சத்திமுற் றத்திறைவனைத் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் புறப்பட்டுச சென்று பரமசிவத்தைத்தொழுது பதிகமோதி விடைபெற்றுக்கொண்டு திருப்பட்டீசசரத்துக கெழுந்தருளுமபோது திருப்பட்டீசசரத்திறைவ ருடைய கட்டளையினால் திருஞானசமபந்தசுவாமிகளுக்குந் தெரியாத வண்ணம சிவபூதங்கள் முத்துப்பந்தல்கொண்டுவந்து வெயில்வெப்பந் தணிபப்தற்குப் பரமசிவம கட்டளையிட டனுப்பியதென்று சொல்லு மொலியும் பந்தரும் ஆகாயத்தில்தோன்ற நோக்கி யிதுவும் நம்மிறைவர் கடடளையாகில் ஏற்றுககொள்ள வேண்டுமென்றிசைந்து சிவிகைவிட் டிழிந்து பணிந்தவளவில் அந்த முத்துப்பந்தற்கால்களைப் பரிசனத்தாா கைககொள்ள அஙகிருந்து மெழுந்தருளித் திருப்பட்டீச்சரத்திற்சேர்ந்து ஆலயத்துட்போய்ச சுவாமியைத்தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து விடைபெற்றுக்கொண்டு புறத்தில்வந்து சிலநாளங்கமர்ந்து புறப்பட்டுத் திருஆறைவடதளி, திருவிரும்பூளை, திருஅரதைப்பெரும்பாழி, திருச சேறை, திருநல்லூர், திருக்குடவாயில், திருநறையூர், திருப்புத்தூர்,

திருச்சிவபுரம், திருக்குடமூக்கு, திருநாகேசசரம், திருவிடைமருதூர், திருக்குரங்காடுதுறை, இந்தத்தலங்களிலெல்லாம் பரமசிவத்தைத் தரிசித்துப் பதிகமோதித் துதித்துத் திருவாவடுதுறைக்கெழுந்தருளிப பரமசிவத்தைத் தரிசித்துப் பதிகமோதி அங்குவீற்றிருக்கும் நாளில்,

சிவபாதவிருதயர் வேள்விசெய்யுங்கால மிதுவாகையால் பொருள் வேண்டுமென்றுசொல்லத் திருஞானசம்பந்தசுவாமிகள் ஆலயத்துக்கெழுந்தருளித் திருப்பதிகமோதித் துதிசெய்தவளவில பரமசிவத்தின் கட்டளையினால ஆயிரம்பொன்னுள்ள வொருமுடிசசை யொருபூதங்கொண்டுவந்து பலிபீடத்தின்மேல் வைத்துத் திருஞானசம்பந்தசுவாமிகளுக்கெதிரில்நின்று இந்தப்பொன்முடி யெடுககவெடுக்கக் குறையாத உலவாக்கிழி இதனைப பரமசிவந் தேவருக்குக் கொடுககும்படி கட்டளையிட்டருளினதால கொண்டுவந்து வைத்தேனென்று சொல்லச சுவாமிகள பணிந்தெடுததுத் தமது திருமுடிமேல் வைததுககொண்டு பிதாவின் கையிறகொடுத்து நீா யாகஞ்செயவதறகு மாத்திரமேயன்றிச் சீகாழியிலுள்ள பிராமணர்கள் யாவருஞ் செய்யவு முதவுமென்றுசொல்லி உத்தரவுகொடுத்து அனுப்பிவிடடு அவவிடததில சிலநாளவீறறிருந்து புறப்பட்டுத் திருக்கோழம்பம, திருவைகன்மாடக்கோயில முதலிய சிலதலங்களுக்குபபோயத் தரிசிததுப் பதிகமோதித் துதிசெய்து யாழ்பபாணநாயனாருடைய தாயின் ஜனன க்ஷேத்திரமாகிய திருத்தருமபுரத்துக்கெழுந்தருளின விடத்தில் யாழ்பபாணருடைய சுற்றத்தார்வந்துவணங்க அவர்களைநோக்கிச சுவாமிகளருளிச்செயயும் பதிகங்களை யாழிலமைத்து வாசிக்கும் பேறுபெற்றிருக்கிறேனென்று சொலல அவர்களகேட்டு நீர் யாழிலமைத்து வாசிப்பதினாலே அந்தப்பதிகம் தேசமெஙகும் விளக்கமுற்றிருக்கின்றதென்றுசொலலவே யாழ்ப்பாணர் அஞ்சி உடனே சுவாமிகளிடத்தில்விண்ணப்பம்பண்ணி யாழிலமையாவண்ணம் ஒருபதிகம் கட்டளையிட்டருளவேண்டுமென்ன அவ்வாறே யாழ்மூரியாகிய திருப்பதிகம் அருளிச்செய்யப் பாணனார் யாழிலமைத்து வாசித்து இசைவுபடாமையினால் பயந்து இந்தயாழினை யெடுத்ததினாலல்லவோ வாசிப்போமென்று எண்ணங்கொள்ள விசைந்ததென்று அதனையெடுத்து உடைக்க மேலே ஓங்கினபோது சுவாமிகள் தடுத்துப் பதிகம் சிவகிருபையினால் வருவதாதலினால் ஒருவாறு வாசிக்கவேண்டுமென்று அந்தயாழினைவாங்கி தாம் வாசித்துக் காண்பித்துக்கொடுத்தருள வணங்கி வாங்கிக்கொண்டு வாசித்துத் துதிசெய்தனர். சுவாமிகள் அதற்குமேல் புறப்பட்டுச் சிலதலங்களிற்போய்த் தரிசித்துப் பதிகமோதித் திருச்சாத்தமங்கைக்கு எழுந்தருளினவிடத்தில் பிராமணகுலசிரோஷ்டராய்ச் சிவநேசமுள்ள திருநீலநக்கநாயனார் எதிர்கொண்டு வந்து வணங்கி அழைத்துக்கொண்டுபோகச் சென்று பரமசிவத்தைத் தரிசித்துத் திருப்பதிகமோதித் துதிசெய்து

நாயனார் திருமாளிகையில் திருவமுதுகொண்டு அங்குவீற்றிருந்து புறப்பட்டுக் கடனாகைக்காரோணமுதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டெழுந்தருளும்போது சிறுத்தொண்டநாயனார் திருசசெஙகாட்டங்குடியிலிருந்து எதிர்கொண்டுவந்து வணங்கி அழைத்துக்கொண்டுபோகச் சென்று சுவாமியைத் தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து சிறுத்தொண்டநாயனார் திருமாளிகையில் மகிழ்வுடன் வீற்றிருந்து திருமருகலுக்கு எழுந்தருளிச சுவாமியைத்தரிசித்துத் திருப்பதிகமோதித் துதிசெய்து வீற்றிருக்கும் நாளில்,

ஒருநாள் தரிசனத்துக்கெழுந்தருளும்போது ஒருவணிகன் ஒருகன்னிகையினையும் அழைத்துக்கொண்டு மதுரைக்குப் போவதற்காக வருகின்றவன் அந்ததிருமருகலில்வந்து அன்றிராத்திரி ஒருமடத்தில் தங்கியிருக்கையில சர்ப்பந்தீண்டி யிறந்துவிடவே அந்தக்கன்னிகை புலம்பிக்கொண்டிருக்கும்போது தரிசனத்துக்கெழுந்தருளின சுவாமிகள் திருவுளமிறங்கி அந்தமடத்துக்குள்செல்ல அவள்கண்டு பின்னும் அதிகமாகத் துயரமுறும்போது நீயஞ்சவேண்டாமென்றுசொல்லி நீங்கள் யாவர்கள் எங்கிருந்து வந்தீர்களென்று வினவலும் வைப்பூரென்னும் பதியிலவாழுந் தாமன் என்னும் என்பிதாவுக்கு என்னுடன் ஏழுபெண்களுண்டு அவர்களில மூத்தபெண்ணைத் தன்னுடன்பிறந்தாள் புத்திரனாகிய இவனுக்கு விவாகஞ்செயது கொடுக்கிறதாக நிசசயித்திருந்தவன் பொருள அபேக்ஷையில் மற்றொருவனுக்குக் கொடுதது விட்டதுமன்றி மற்ற ஐந்துபெண்களையும் ஒவ்வொருவருக்குக் கொடுத்துவிட்டு இவனுக்கு என்னைக்கொடுப்பதாக நிச்சயித்தவன் முன்போலவே மற்றொருவனுக்குக்கொடுக்க எததனிததனை யிவனறிந்து விதனப்படுவதை நான் பார்தது முற்றிலு மோசஞ்செய்வது தர்மமல்லவேயென்று இவனை அழைததுககொண்டு இங்கேவந்தவிடத்தில் விஷதிருஷ்டியினு லிறந்துவிடடான் சுவாமிகள் ரடசிககவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யக் கிருபைகூர்ந்து "சடையாயெனுமால்" என்னுந் திருப்பதிகம அருளி அவனைப்பிழைப்பித்து அவர்களுக்கு விவாகமுஞ்செய்வித்து அனுப்பிவிட்டு அங்குவீற்றிருக்குமநாளில சிறுத்தொண்டநாயனார்வந்து மீட்டுந் திருச்செஙகாடடங்குடிககு அழைத்துக்கொண்டுபோகச சென்றருளிச் சுவாமிசன்னதியிற்போய்ப் பதிகமோதித் துதிசெய்து சிலநாளங்கமர்ந்து திருப்புகலூர்தொழச செல்லும்போது முருகநாயனார் எதிர்கொண்டு வநது அழைத்துக்கொண்டு போகப்போய்ச் சுவாமியைத் தரிசித்துப் பதிகமோதித துதிசெய்து அங்குவீற்றிருக்கையில் திருநாவுககரசுசுவாமிகள்வந்தருளுகின்றதென்றுகேள்விபபட்டு எதிர்கொண்டுபோய்மகிழ்ந்து எங்கிருந்து சுவாமிகளெழுந்தருளுகின்றதென்னத திருவாரூரிலிருந்து வருகிறேனென்ன இப்போது அஙகுநிகழுஞ்சிறப்பு யாதோவென்னத் திருநாவுக்கரசுசுவாமிகள் பதிகத்தாற் சிறப்பித்துச்சொல்ல ஆனால்நாமுந் தரிசித்துத் தேவரீரிடத்தில் வருகிறோமென்றுசொல்லித் திருவாரூருக்கு எழுந்தருளிப் புற்றிடங்கொண்டாரைத் தரிசித்துப் பதிகமோதித துதிசெய்து அங்கு வீற்றிருக்கும்நாளில் திருவலிவலம் திருக்கோளிலி முதலான தலங்களிற்சென்று சுவாமியைத்தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து மீட்டுந்திருவாரூர்வந்துசேர்ந்து சிலநாளங்கமர்ந்து மறுபடி திருப்பு

கலூர்க்கெழுந்தருளத் திருநாவுக்கரசுசுவாமிகளும் முருகநாயனாரும் எதிர்கொண்டுவர அவர்களுடன்சென்று சேர்ந்து சுவாமியைத்தரிசித்து அங்கிருக்கையில திருநீலநக்கநாயனாரும் சிறுத்தொண்டநாயனாரும்வர அவர்களுடனுஞ்சென்று சுவாமியைத துதித்துக்கொண்டிருந்து திருநாவுக்கரசுசுவாமிகளுடன் புறப்பட்டுத திரு அம்பர், திருக்கடவூர் முதலாகிய தலங்களிற்சென்று தரிசிததுத் திருவீழிமிழலையிற்சென்று சுவாமியைத் தரிசித்துப் பதிகமோதி யஙகு வீற்றிருக்கும் நாளில் மழையின்மையால் கருப்புக்காலம் நேரிட்டு உயிர்களெல்லாம வருந்துகையில் பரமசிவங் கிருபை கூர்ந்து இவ்விருவர் சொப்பனத்திலும் எழுந்தருளி இந்தக்காலத்தினால உங்களுக்கு வருத்தமில்லாவிடினும் அடியார்கள்பொருட்டு இரண்டுபொற்காசு கிழக்குப்பீடத்தும் மேற்குப்பீடத்தும்வைக்கிறோம் அதை நீஙகளிருவரும் எடுததுககொண்டு வேண்டிய பொருள்கள்வாங்கி அடியார்களுக்கு அமுதுபடையுங்களென்றருள அவ்வாறே கிழக்குப்பீடத்துக்காசு திருஞானசம்பந்தசுவாமிகளும மேற்குப்பீடத்துக்காசு அப்பர்சுவாமிகளுமெடுத்து அடியார்களுககு அமுதுபடைத்துக்கொண்டிருந்து பின்பு பஞ்சந்தெளிந்தவுடன் புறப்பட்டு மத்தியிலிருக்குந் தலங்களைத் தரிசிததுக்கொண்டு திருமறைக்காட்டிற்சோந்து வேதம் பூசித்து மூடிப்போன திருக்கதவை அப்பர்சுவாமிகளால் திறபபித்துப பின்பு அது திறக்கவு மூடவுமாயிருக்கும்படி தாம்பதிகமோதித் துதிசெய்து அங்கிருக்கும் நாளில்,

மதுரையில் சைனசமயமேலிட்டு அப்போதிருந்த கூன்பாண்டியராசனும் அதற்குட்பட்ட பாண்டிநாடெங்கும் சைவசமயம் அடங்கிப் போகவே சைவப்பற்றுவிடாமலிருந்த குலச்சிறைநாயனாராகிய மந்திரியாரும் மங்கையர்க்கரசியென்னும் அவ்வரசன் பததினியாரும் திருஞானசம்பந்தசுவாமிகள் திருமறைக்காட்டிலெழுந்தருளியிருப்பதைக்கேட்டுப் பாண்டிநாட்டில் சமண்மேலிட்டிருப்பதைச சிலருடன் சொல்லியனுப்ப அவர்கள்வந்து சுவாமிகளைககண்டு தரிசிததுத தாஙகள வந்தகாரியததைச சொல்லக்கேட்டு மதுரைக்கெழுந்தருளி யொருமடத்தி லிருக்கையில் அன்றுராத்திரி சமணாகள் அமமடத்தில் தீயிடக்கண்டு இந்தவெப்பம் பாண்டியனைசசேரக்கடவதென்று பதிகமோதியருளலும் அந்தவெப்பம் பாண்டியனுடலில் சுரவியாதியாய் நேரிட்டு வருந்துகையில் மந்திரியார் வேண்டுதலினால் தாமெழுந்தருளித திருநீற்றுப்பதிகமோதி அந்தவிபூதியைப் பாண்டியன்மேனியில் பூசினவளவில அப்பிணிநீங்கிவிட அரசன் எழுந்து சமணர்களைநோக்கி நீங்கள் தோற்றீர்களல்லவாவென்ன அவர்களிந்த ஒருகாரியத்தில் தோற்புகெலிப்பு சொல்லக்கூடாது. அவர்களுண்மைப்பொருளையும் எங்களுண்மைப்பொருளையும் தனிததனி ஏட்டிலெழுதி அவ்வேடுகளைத்தீயிலிட்டு வேகாமலிருப்பதெதுவோ அது உண்மைப்பொருளென்றுசொல்லித் தங்களுண்மைப்பொருளை யொரு ஏட்டிலெழுதித் தீயிலிட திருஞானசம்பந்தசுவாமிகள் "போகமார்த்தபூண்முலையாளென்னும்" திருநள்ளாற்றுப்பதிகம் எழுதியிருக்கும் ஏட்டினையெடுத்து அந்தத்தீயிலிட்டனர். அவ்வாறிட்ட ஏடுகளில் சுவாமிகளிட்ட ஏடுவேகாமல் வைத்தபடியேயிருக்க எடுத்துச்சபையோர்காணவைத்தனர். சமணர்கள் தாங்களிட்ட ஏட்டினையெடுக்கும்போது சாம்பலாய்

விட்டது, அதன்பின்பு பாண்டியன் அவர்களைநோக்கி யிப்போதுந்தோ ற்றீர்களேயென்ன அது நிசமே தோற்றவர்கள் முற்றிலுந்தோற்காரர்கள் ஆதலால் முன்போல எங்களிருவர்சமயக் கோட்பாட்டின் உண்மையை எழுதி அவ்வேடுகளை வைகைநதியிலிட்டு எதிரோற்று ஓடுமானால் அது வே யுண்மையென்று சொல்லியவளவில் மந்திரியாரிப்போதுந்தோற்றீ ர்களானால் என்னசெய்வதென்னக் கழுவிலேறுகிறோ மென்று வாய்தவ றிச சொல்லிவிட்டார்கள்.

அதற்குமேல் திருஞானசம்பந்தசுவாமிகள் "வாழ்கவந்தணர் வா னவரானினம் – வீழ்கதண்புனல் வேந்தனுமோங்குக" என்னும் பாசுர முதல் பத்துத் திருப்பாசுரமுந் திருக்கடைககாப்பும் எழுதி அவ்வேட் டினை வைகையிலிட அவர்கள் தாங்களுண்மையாகக் கொண்டிருக்கும் பொருளை எழுதிய ஏட்டினையும் வைகைநதியினி லிட்டார்கள். திருஞா னசம்பந்தசுவாமிகளிட்டவேடு வெள்ளத்துக் கெதிரிட்டுச்சென்றது. ச மணர்களிட்ட ஏடு வெள்ளமபோகின்ற வழியேசென்று அவர்கள் கைக் கு அகப்படாமல் போய்விட்டது. எதிரோறறுச்செல்லும் ஏடு அதிவிரை வாகச் செல்லுகின்றமையால மந்திரியார் குதிரைமே லேறிக்கொண்டு போயத் திருஞானசம்பந்தசுவாமிக ளருளிச்செய்த தேவாரத்தினால தி ருஏடகமென்னுந் தலத்துககருகில் நிறகக்கண்டு எடுத்துககொண்டுவரக் கண்டு சமணர்கள தங்களவாககினால் சொல்லிய வண்ணமே கழுமரத்தி லேறிவிட்டார்கள். வேந்தனுமோங்குக என்னுந திருவாக்கினுண்மையி னால பாண்டியராசன் கூனும நிமிர்ந்தது. இந்தச செயகைகளைக் கண்டு திருஞானசமபந்தசுவாமிகளைத துதிசெய்து யாவரும அற்புதமடைந்து விபூதிதரிததுககொண்டு சைவசமயததவாகளானார்கள்.

அதன்பின்பு சுவாமிகள் பாண்டியராசன்முதலானவாகளுடன் சொ ககநாதசுவாமியைத தரிசிததுத தேவாரமோதிப பாண்டிநாட்டிலிருக்கு மற்றஸ்தலஙகளுககு மெழுநதருளித் தரிசித்துப பதிகமோதித் துதி செ யது அவ்விடமவிட்டுச சோழநாட்டி லிருககும தலஙகளைத தரிசிததுக கொண்டுவருகையில் திருத்தெளிச்சேரியென்னுந் தலததுககருகில வரு ம்போது பரசமயககோளரி யெழுந்தருளுகின்றதென்று ஊதுகிற திருச சின்னவோசையை அஙகிருககும பௌததரில புத்தநந்தியென்பவன்கே ட்டு மனமபொறாமல வந்து தடுததனன். அந்தச்சேதியைச சம்பந்தசர ணாலயரென்கிறவர் கேள்வியுற்று வந்து "புத்தர்சமணகழுக்கையர்" எ னமுன்னம் திருஞானசம்பந்தசுவாமிகள்கட்டளையிட்டிருக்கிற தேவா ரமோதினவளவில அவன்தலையிலிடிவிழவே யிறந்துபோனான். அதுகண் டு அஙகிருநத பௌததரெல்லாம ஓடிபபோய் மறுபடிச சாரிபபுத்தனு டன் கூடிவநது யிவ்வாறுசெய்யாமல வாதினால் வெலலுவதானாலிருககி றோமென்னத் திருஞானசமபந்த சுவாமிகள் திருக்கூட்டத்துடன் அங் கொரு மண்டபத்திற் சேர்ந்திருக்கச சம்பநதசரணாலயர் சுவாமிகளுத்த ரவுபெற்றுககொண்டு பௌத்தசமயக் கோட்பாட்டைக் குறித்து வாது செய்கையில் அவர்கள் தோற்படையககண்டு அவர்களெல்லாருக்கும் வி பூதிகொடுத்துத் தரித்துக்கொள்ளச்சொல்லிச சைவர்களாக்கிவிட்டு அ ஙகிருந்து புறப்பட்டு மற்றத்தலங்களிற சென்று சுவாமியைத் தரிசித்து நடுநாட்டில் வந்து அஙகிருக்குந் தலஙகளிலுஞ சென்று சுவாமியைதத

ரிசித்துத் தொண்டைநாட்டில் வந்து அங்கிருக்கும் காஞ்சீபுரமுதலாகிய தலங்களிற்சென்று தரிசித்து காளத்திக் கெழுந்தருளிப் பதிகமோதித் துதிசெய்து அங்கிருந்தவண்ணமாகவே ஸ்ரீகயிலாசம் - திருக்கேதாரம்- திருவனேகதங்காவதம்-திருப்பருப்பதம்-திருவிந்திரநீலப்பருப்பதம் - திருக்கோகரணம்-இந்தத்தலங்களுக்குப் பதிகமோதித் துதிசெய்து அங்கிருந்து திருவொற்றியூருக்கெழுந்தருளி வந்து சுவாமியைத் தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து அங்குவீற்றிருக்கையில் பூர்வம்நடந்தது திருமயிலையில்வாழும் வணிககுலோத்தமராகிய சிவநேச செட்டியாருக்கு கபாலீசர் கிருபையினால் ஒருபுத்திரியுண்டாகி வளருநாளில் ஒருநாள் தோழிகளுடன் நந்தனவனத்திற்சென்று மலர்கொய்யும்போது விஷந்தீண்டி மணிமந்திர அவுஷதங்களினாலுந் தீராம லிறந்துவிடவே தகனஞ்செய்வித்து முன்னம் இந்தக்கன்னிகையை யென் திரவியத்துடன் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கென்று நியமித்திருந்தமையால் அவரிடத்தில ஒப்பித்துவிடவேண்டுமென்று தகனஞ்செய்த சாம்பலை அஸ்தியுடன் குடத்தில்வைத்து அந்தக் குடத்தைக் கொண்டுவந்து கன்னிமாடத்தில் மஞ்சமேல்வைத்து முன்போலத் தோழிகளுபசாரஞ்செய்துகொண்டிருக்கும்படி செய்தனர். இப்படியிருக்கின்றவா திருஞானசம்பந்த சுவாமிகள் திருவொற்றியூருக்கு வந்திருப்பதைக் கேள்விப்பட்டுமகிழ்ச்சியடைந்து அவ்விடத்துக்குப்போய்ச் சுவாமிகளைக்கண்டு சாஷ்டாங்கமாகச் சேவித்துச் சகலாடம்பரத்துடனுந் திருமயிலைக்கெழுந்தருளும்படி அழைத்துக்கொண்டுவரச் சுவாமிகள் வந்து கபாலீசரைத் தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து செட்டியாரைநோக்கி அந்தக்குடத்தைக்கொண்டுவரச் சொல்லி "மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலை" யென்னும்பதிகமோதி அவ்வங்கம் பெண்ணாகும்படி செய்தருளிக் கபாலீசரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு திருவான்மியூர் முதலான மற்றத்தலங்களையுந் தரிசித்துக்கொண்டு சீகாழிக்கெழுந்தருளி யிருக்கையில் பிராமண கிரத்தியத்தின்பொருட்டு விவாகஞ்செய்துகொண்டருளவேண்டுமென்று நீலநக்கநாயனார் முதலான திருத்தொண்டர்கள் பிரார்த்தித்தமையால் ஒருவாறுசம்மதித்து நல்லூர்ப்பெருமணத்திலிருக்கும் பிராமணகுலசிரேஷ்டராகிய நம்பாண்டார் குமாரத்தியை விதிப்படி சிறப்புடன் திருமணங்கொண்டு ஓமாக்கினியை வலம்வரும்பொருட்டு எழுந்து நாம்வலஞ்செய்யத்தக்க அக்கினி பரமசிவமென்று மனைவிகையைப் பற்றிக் கொண்டு ஆலயத்துக்குப்போய்க் கல்லூர்ப்பெருமணமென்னும் பதிகமோதப் பரமசிவம் கிருபைகூர்ந்து உன்காதலியுடன் நீ நம்மிடத்துக்கு வாவென்றருளினவுடன் அவ்வாலயமுழுவதுஞ் சோதியாய் வாயிலைவகுத்துக்காட்ட நமசிவாயப்பதிகமோதி அங்கு வந்திருப்பவர்களை யெல்லாம் அதற்குள்போகும்படி கட்டளையிட்டுப் பின்பு தாமும் கல்யாணப்பெண்கையைப் பற்றியபடியே அந்தச் சோதிக்குள்போய்க் கலந்தருளினார். பின்பு சோதிமறைந்து பழையபடி ஆலயமாகவிருந்தது.

திருச்சிற்றம்பலம்.

---

ஆளுடையபிள்ளையார் சரிதம் முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

## அடங்கன்முறைத்

# தேவாரப்பதிகங்கள்.

திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிப்பூசியென் னுள்ளங்கவர்கள்வ
னேடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (க)

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னாப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (உ)

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வ
னூர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (ங)

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டி
லுண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (ச)

ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்மிவனென்ன
வருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (ரு)

மறைகலந்தவொலி பாடலொடாடல ராகிமழுவேந்தி
யிறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (சு)

சடைமுயங்குபுன லன்னனலன்னெரி வீசிச்சதிர்வெய்தி
யுடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்
கடல்முயங்குகழி சூழ்குளிர்கானல் பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (எ)

வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
வுயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்
றுயரிலங்குமுல கிற்பலவூழிக டோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (அ)

தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானு
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்ம்மக ளிர்ம்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (கூ)

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா
வொத்தசொல்லவுல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. (க0)

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
யொருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - பிரமபுரீசர் - தேவியார் - திருநிலைநாயகியம்மை.
திருத்தோணியில் வீறறிருப்பவர் தோணியப்பர்.

---

திருக்கோலக்கா-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மடையில்வாளை பாயமாதரார்
குடையும்பொய்கைக் கோலக்காவுளான்
சடையும்பிறையுஞ் சாம்பற்பூச்சுங்கீ
ழுடையுங்கொண்ட வுருவமென்கொலோ. (க)

பெண்டான்பாக மாகப்பிறைச்சென்னிக்
கொண்டான்கோலக் காவுகோயிலாக்
கண்டான்பாதங் கையாற்கூப்பவே
யுண்டானஞ்சை யுலகமுய்யவே. (உ)

பூணற்பொறிகொ ளரவம்புன்சடைக்
கோணற்பிறையன் குழகன்கோலக்கா
மாணப்பாடி மறைவல்லானையே
பேணப்பறையும் பிணிகளானவே. (ங)

தழுக்கொள்பாவந் தளரவேண்டுவீர்
மழுக்கொள்செல்வன் மறிசேரங்கையான்
குழுக்கொள்பூதப் படையான்கோலக்கா
விழுக்காவண்ண மேத்திவாழ்மினே. (ச)

மயிலார்சாயன் மாதோர்பாகமா
வெயிலார்சாய வெரித்தவெந்தைதன்
குயிலார்சோலைக் கோலக்காவையே
பயிலாநிற்கப் பறையும்பாவமே. (ரு)

வெடிகொள்வினையை வீட்டவேண்டுவீர்
கடிகொள்கொன்றை கலந்தசென்னியான்
கொடிகொள்விழவார் கோலக்காவுளெம்
மடிகள்பாத மடைந்துவாழ்மினே. (சா)

நிழலார்சோலை நீலவண்டினங்
குழலார்பண்செய் கோலக்காவுளான்
கழலான்மொய்த்த பாதங்கைகளாற்
றொழலார்பக்கற் றுயரமில்லையே. (எ)

எறியார்கடல்சூ ழிலங்கைக்கோன்றனை
முறியார்தடக்கை யடர்த்தமூர்த்திதன்
குறியார்பண்செய் கோலக்காவையே
நெறியாற்றொழுவார் வினைகணீங்குமே. (அ)

நாற்றமலர்மே லயனுநாகத்தி
லாற்றலணைமே லவனுங்காண்கிலாக்
கூற்றமுதைத்த குழகன்கோலக்கா
வேற்றான்பாத மேத்திவாழ்மினே. (கூ)

பெற்றமாசு பிறக்குஞ்சமணரு
மூற்றதுவர்தோ யுருவிலாளருங்
குற்றநெறியார் கொள்ளார்கோலக்காப்
பற்றிப்பரவப் பறையும்பாவமே. (க0)

நலங்கொள்காழி ஞானசம்பந்தன்
குலங்கொள்கோலக் காவுளானையே
வலங்கொள்பாடல் வல்லவாய்மையா
ருலங்கொள்வினைபோ யோ[illegible]ழ்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநா[illegible]ளது.

சுவாமிபெயா - சததபுரீசா - தேவியார் - ஓசைகொடுததநாயகியம்மை.

---

சீகாழி - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பூவார்கொன்றைப் புரிபுன்சடையீர்
காவாயெனநின் றேத்துங்காழியார்
மேவார்புரமூன் றட்டாரவர்போலாம்
பாவாரின்சொற் பயிலும்பரமரே. (க)

எந்தையென்றங் கிமையோர்புகுந்தீண்டிக்
கந்தமாலை கொடுசேர்காழியார்
வெந்தநீற்றர் விமலரவர்போலா
மந்திநட்ட மாடுமடிகளே. (உ)

தேனைவென்ற மொழியாளொருபாகங்
கானமான்கைக் கொண்டகாழியார்
வானமோங்கு கோயிலவர்போலா
மானவின்ப மாடுமடிகளே. (ங)

மாணவென்றிக் காலன்மடியவே
காணமாணிக் களித்தகாழியார்
நாணார்வாளி தொட்டாரவர்போலாம்
பேணார்புரங்க ளட்டபெருமானே. (ச)

மாடேயோத மெறியவயற்செந்நெற்
காடேறிச்சங் கீனுங்காழியார்
வாடாமலராள் பங்கரவர்போலா
மேடார்புரமூன் றெரித்தவிறைவரே. (ரு)

கொங்குசெருந்தி கொன்றைமலர்கூடக்
கங்கைபுனைந்த சடையார்காழியா
ரங்கணரவ மாட்டுமவர்போலாஞ்
செங்கணரக்கர் புரத்தையெரித்தாரே. (சு)

கொல்லைவிடைமுன் பூதங்குனித்தாடுந்
தொல்லவடத்தை யுகப்பார்காழியா
ரல்லவிடத்து நடந்தாரவர்போலாம்
பல்லவிடத்தும் பயிலும்பரமரே. (எ)

எடுத்தவரக்க னெரியவிரலூன்றிக்
கடுத்துமுரிய வடர்த்தார்காழியா
ரெடுத்தபாடற் கிரங்குமவர்போலாம்
பொடிக்கொணீறு பூசும்புனிதரே. (அ)

ஆற்றலுடைய வரியும்பிரமனுந்
தோற்றங்காணா வென்றிக்காழியா
ரேற்றமேறங் கேறுமவர்போலாங்
கூற்றமறுகக் குமைத்தகுழகரே. (கூ)

பெருக்கப்பிதற்றுஞ் சமணர்சாக்கியர்
கரக்கும்முரையை விட்டார்காழியா
ரிருக்கின்மலிந்த விறைவரவர்போலா
மருப்பின்முலையாள் பங்கத்தையரே. (க0)

காரார்வயல்சூழ் காழிக்கோன்றனைச்
சீரார்ஞான சம்பந்தன்சொன்ன
பாரார்புகழப் பரவவல்லவ
ரோரார்வானத் தினிதாவிருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கழுமலம்-திருத்தாளச்சதி-பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பந்தத்தால்வந்தெப்பால் பயின்றுநின்றவும்பரப்
பாலேசேர்வாயேனோர்கானே பயில்கணமுனிவர்களுஞ்
சிந்தித்தேவந்திப்பச் சிலம்பின்மங்கைதன்னொடுஞ்
சேர்வார்நாணீள்கயிலைத் திகழ்தருபரிசதெலாஞ்

சந்தித்தேயிந்தப்பார் சனங்கணின்றுதங்கணாற்
றமேகாணாவாழ்வாரத் தகவுசெய்தவனதிடங்
கந்தத்தாலெண்டிக்குங் கமழ்ந்திலங்குசந்தனக்
காடார்பூவார்சீர்மேவுங் கழுமலவளநகரே. (க)

பிச்சைக்கேயிச்சித்துப் பிசைந்தணிந்தவெண்பொடிப்
பீடார்நீடார்மாடாரும் பிறைநுதலரிவையொடு
முச்சத்தால்நச்சிப்போ ணுடர்ந்தடர்ந்தவெங்கணே
றூராவூராநீள்வீதிப் பயில்வொடுமொலிசெயிசை
வச்சத்தானச்சுச்சேர் வடங்கொள்கொங்கைமங்கைமார்
வாராநேரேமாலாகும் வசுவலவனதிடங்
கச்சத்தான்மெச்சிப்பூக் கலந்திலங்குவண்டினங்
காரார்காரார்நீள்சோலைக் கழுமலவளநகரே. (உ)

திங்கட்கேதும்பைக்கே திகழ்ந்திலங்குமத்தையின்
சேரேசேரேநீராகச் செறிதருசுரநதியோ
டங்கைச்சேர்வின்றிக்கே யடைந்துடைந்தவெண்டலைப்
பாலேமேலேமாலேயப் படர்வுறுமவனிறகும்
பொங்கப்பேர்நஞ்சைச்சேர் புயங்கமங்கள்கொன்றையின்
போதார்தாரேதாமேவிப் புரிதருசடையனிடங்
கங்கைக்கேயும்பொற்பார் கலந்துவந்தபொன்னியின்
காலேவாராமேலேபாய் கழுமலவளநகரே. (ஈ)

அண்டத்தாலெண்டிக்கு மமைந்தடங்குமண்டலத்
தாறேவேறேவானுள்வா ரவரவரிடமதெலா
மண்டிப்போய்வென்றிப்போர் மலைந்தலைந்தவும்பரு
மாறேலார்தார்தாமேவும் வலிமிகுபுரமெரிய
முண்டத்தேவெந்திட்டே முடிந்திடிந்தவிஞ்சிசூழ்
மூவாமூதூர்மூதூரா முனிவுசெய்தவனதிடங்
கண்டிட்டேசெஞ்சொற்சேர் கவின்சிறந்தமந்திரக்
காலேயோவாதார்மேவுங் கழுமலவளநகரே. (ச)

திக்கிற்றேவற்றற்றே திகழ்ந்திலங்குமண்டலச்
சீரூர்வீரூர்போரார்தா ருகனுடலவனெதிரே
புக்கிட்டேவெட்டிட்டே புகைந்தெழுந்தசண்டத்தீப்
போலேபூநீர்தீகான்மீப் புணர்தருமுயிர்கடிறஞ்

சொக்கத்தேநிர்த்தத்தே தொடர்ந்தமங்கைசெங்கதத்
தோடேயாமேமாலோகத் துயர்களைபவனிடங்
கைக்கப்போயுக்கத்தே கனன்றுமிண்டுதண்டலைக்
காடேயோடாவூரேசேர் கழுமலவளநகரே. (௫)

செற்றிட்டேவெற்றிச்சேர் திகழ்ந்ததும்பிமொய்ம்புறுஞ்
சேரேவாரார்நீள்கோதைத் தெரியிழைபிடியதுவா
யொற்றைச்சேர்முற்றற்கொம் புடைத்தடக்கைமுக்கண்மிக்
கோவாதேபாய்மாதானத் துறுபுகர்முகவிறையைப்
பெற்றிட்டேமற்றிப்பார் பெருத்துமிக்கதுக்கமும்
பேராநோய்தாமேயாமை பிரிவுசெய்தவனிடங்
கற்றிட்டேயெட்டெட்டுக் கலைத்துறைக்கரைச்செலக்
காணுதாரேசேராமெய்க் கழுமலவளநகரே. (௬)

பத்திப்போர்வித்திட்டே பரந்தவைம்புலன்கள்வாய்ப்
பாலேபோகாமேகாவாப் பகையறுவகைநினையா
முத்திக்கேவிக்கத்தே முடிக்குமுக்குணங்கள்வாய்
மூடாவூடாநாலந்தக் கரணமுமொருநெறியாய்ச்
சித்திக்கேயுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப்பரம்பொருள்
சேர்வார்தாமேதானுகச் செயுமவனுறையுமிடங்
கத்திட்டோர்சட்டங்கந் கலந்திலங்குநற்பொருள்
காலேயோவாதார்மேவுங் கழுமலவளநகரே. (எ)

செம்பைச்சேரிஞ்சிச்சூழ் செறிந்திலங்குபைம்பொழிற்
சேரேவாராவாரீசத் திரையெறிநகரிறைவ
னிம்பர்க்கேதஞ்செய்திட் டிருந்தரன்பயின்றவெற்
பேரார்பூநேரோர்பாதத் தெழில்விரலவணிறுவிட்
டம்பொற்பூண்வென்றித்தோ ளழிந்துவந்தனஞ்செய்தாற்
காரார்கூர்வாள்வாணுளன் றருள்புரிபவனிடங்
கம்பத்தார்தும்பித்திண் கவுட்சொரிந்தமும்மதக்
காரார்சேருர்மாவீதிக் கழுமலவளநகரே. (அ)

பன்றிக்கோலங்கொண்டிப் படித்தடம்பயின்றிடப்
பானுமாறுனுமேயப் பறவையினுருவுகொள
வொன்றிட்டேயம்புச்சே ருயர்ந்தபங்கயத்தவ
னேதானேதானஃதுணரா துருவினதடிமுடியுஞ்

சென்றிட்டேவந்திப்பத் திருக்களங்கொள்பைங்கணின்
றேசால்வேரோகாரத் தெரிவுசெய்தவனதிடங்
கன்றுக்கேழுன்றிற்கே கலந்திலந்நிறைக்கவுங்
காலேவாராமேலேபாய் கழுமலவளநகரே. (கூ)

தட்டிட்டேமுட்டிக்கைத் தடுக்கிடுக்கிநின்றுணாத்
தாமேபேணாதேநாளுஞ் சமணொடுமுழல்பவரு
மிட்டத்தாலத்தந்தா னிதன்றதென்றுநின்றவர்க்
கேயாமேவாயேதுச்சொல் லிலைமலிமருதம்பூப்
புட்டத்தேயட்டிட்டுப் புதைக்குமெய்க்கொள்புத்தரும்
போல்வார்தாமோராமேபோய்ப் புணர்வுசெய்தவனதிடங்
கட்டிக்கால்வெட்டித்தீங் கரும்புதந்தபைம்புனற்
காலேவாராமேலேபாய் கழுமலவளநகரே. (க0)

கஞ்சத்தேனுண்டிட்டே களித்துவண்டுசெண்பகக்
கானேதேனேபோராருங் கழுமலநகரிறையைத்
தஞ்சச்சார்சண்பைக்கோன் சமைத்தநற்கலைத்துறை
தாமேபோல்வார்தேனேரார் தமிழ்விரகன்மொழிக
ளெஞ்சத்தேய்வின்றிக்கே யிமைத்திசைத்தமைத்தகொண்
டேழேயேழேநாலேமூன் றியலிசையிசையியல்வா
வஞ்சத்தேய்வின்றிக்கே மனங்கொளப்பயிற்றுவோர்
மார்பேசேர்வாள்வானோர்சீர் மதிநுதன்மடவரலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

# இரண்டாந்திருமுறை.

## திருநனிபள்ளி - பண் - பியந்தைக்காந்தாரம்

பாலைநெய்தல்பாடியருளியது.

திருச்சிற்றம்பலம்.

காரைகள்கூகைமுல்லை களவாகையீகை படர்தொடரிகள்ளிகவினிச்
சூரைகள்பம்மிவிம்மு சுடுகாடமர்ந்த சிவன்மேவுசோலைநகர்தான்
றேரைகளாரைசாய மிதிகொள்ளவாளை குதிகொள்ளவள்ளைதுவள
நாரைகளாரல்வார வயன்மேதிவைகு நனிபள்ளிபோலுநமர்காள். (க)

சடையிடைபுக்கொடுங்கி யுட்டங்குவெள்ளம் வளர்திங்கள்கண்ணிய
யலே, யிடையிடைவைத்ததொக்கு மலர்தொத்துமாலை யிறைவன்னி

டங்கொள்பதிதான், மடையிடைவாளைபாய முகிழ்வாய்நெரிந்து மணநாறுநீலமலருந், நடையுடையன்னம்வைகு புனலம்படப்பை நனிபள்ளிபோலுநமர்காள். (௨)

பெறுமலர்கொண்டுதொண்டர் வழிபாடுசெய்ய லொழிபாடிலாத பெருமான், கறுமலர்கண்டமாக விடமுண்டகாளை யிடமாயகாதனகர்தான், வெறுமலர்தொட்டுவிட்ட விசைபோனகொம்பின் விடுபோதலர்ந்தவிளைசூழ், நறுமலரல்லிபுல்லி யொலிவண்டுறங்கு நனிபள்ளிபோலுநமர்காள். (௩)

குளிர்தருகங்கைதங்கு சடைமாடிலங்கு தலைமாலையோடுகுலவி
யொளிர்தருதிங்கள்சூடியுமைபாகமாகவுடையானுகந்தநகர்தான் [நல
குளிர்தருகொம்மலோடு குயில்பாடல்கேட்ட பெடைவண்டுதானுமு
நளிர்தருசோலைமாலை நரைகுருகுவைகு நனிபள்ளிபோலுநமர்காள்.

தோடொருகாதனாகி யொருகாதிலங்கு சுரிசங்கநின்றுபுரளக்
காடிடமாகநின்று கனலாடுமெந்தை யிடமாயகாதனகர்தான்
வீடுடனெய்துவார்கள் விதியென்றுசென்று வெறிநீர்தெளிப்பவிரலா
னுடனாடுசெம்மை யொலிவெள்ளமாரு நனிபள்ளிபோலுநமர்காள்

மேகமோடோடுதிங்கண் மலராவணிந்து மலையான்மடந்தைமணிபொன், னாகமோர்பாகமாக வனலாடுமெந்தை பெருமானமர்ந்தநகர்தா, னாகமோடாடுமந்தி யுகளுஞ்சிலம்ப வகிலுந்தியொண்பொனிடறி, நாகமோடாரம்வாரு புனல்வந்தலைக்கு நனிபள்ளிபோலுநமர்காள். (௬)

தகைமலிதண்டுசூல மனலுமிழுநாகங் கொடுகொட்டிவீணைமுரல, வகைமலிவன்னிகொன்றை மதமத்தம்வைத்த பெருமானுகந்தநகர்தான், புகைமலிகந்தமாலை புனைவார்கள்பூசல் பணிவார்கள்பாடல்பெருகி, * நகைமலிமுத்திலங்கு மணல்சூழ்கிடக்கை நனிபள்ளிபோலுநமர்காள். (௭)

வலமிகுவாளன்வேலன் வளைவாளெயிற்று மதியாவரக்கன்வலியோ
டுலமிகுதோள்களொல்க விரலாலடர்த்த பெருமானுகந்தநகர்தா

---

* பாலைநெய்தல்பாடியது - இந்த நான்காவதுசரணத்தால் விளங்குகின்றது, எவ்வாறென்னில், முத்துகள்விளங்குமணல்சூழ்ந்தநிலமென்றதனாலென்க. பாலைநெய்தல்பாடியதும்-பாம்பழியப்பாடியதும்-என்னுந் திருவெண்பாவுமுணர்க.

னிலமிகுகீழுமேழு நிகராதுமில்லை யெனநின்றநீதியதனை [ள்.
நலமிகுதொண்டர்நாளு மடிபரவல்செய்யு நனிபள்ளிபோலுநமர்கா

நிறவுருவொன்றுதோன்றி யெரியொன்றிநின்ற தொருநீர்மைசீர்
மைநினையா, ரறவுருவேதனுவ னயனோடுமாலு மறியாதவண்ணனகர்
தான், புறவுரிமுல்லைமௌவல் குளிர்பிண்டிபுன்னை புனைகொன்றைது
ன்றுபொதுளி, நறவிரிபோதுதாது புதுவாசநாறு நனிபள்ளிபோலு
நமர்காள். (௯)

அனமிகுசெல்குசோறு கொணர்கென்றுகையி லிடவுண்டுபட்டவ
மணும், மனமிகுகஞ்சிமண்டை யதிலுண்டுதொண்டர் குணமின்றிநி
ன்றவடிவும், வினைமிகுவேதநான்கும் விரிவித்தநாவின் விடையானுக
ந்தநகர்தா, னனமிகுதொண்டர்நாளு மடிபரவல்செய்யு நனிபள்ளி
போலுநமர்காள். (௧௦)

கடல்வரையோதமல்கு கழிகானல்பானல் கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறுநாலு முளதாகவைத்த பதியானஞானமுனிவ
னிடுமறையொன்றவத்தர் பியன்மேலிருந்தி னிசையாலுரைத்தபனுவ
னடுவிருளாடுமெந்தை நனிபள்ளியுள்க வினைகெடுதலாணைநமதே(௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## மூன்றாந்திருமுறை.

### திருவலம்புரம் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

கொடியுடைமும்மதிலூடுருவக் குனிவெஞ்சிலைதாங்கி
யிடிபடவெய்தவமரர்பிரா னடியாரிசைந்தேத்தத்
துடியிடையாளையோர்பாகமாகத் துதைந்தாரிடம்போலும்
வடிவுடைமேதிவயல்படியும் வலம்புரநன்னகரே (௧)

கோத்தகல்லாடையுங்கோவணமுங் கொடுகொட்டியுங்கொண்டொரு
தேய்த்தன்றனங்கனைத்தேசழித்துத் திசையார்தொழுதேத்தக் [கை
காய்த்தகல்லாலதன்கீழிருந்த கடவுளிடம்போலும்
வாய்த்தமுத்தீத்தொழினன்மறையோர் வலம்புரநன்னகரே. (௨)

தொய்யதோர்மான்மறிகைவிரலி னுனைமேனிலையாக்கி
மெய்யெரிமேனிவெண்ணீறுபூசி விரிபுன்சடைதாழ

மையிருஞ்சோலைமணங்கமழ விருந்தாரிடம்போலும்
வைகலுமாமுழவம்மதிரும் வலம்புரநன்னகரே. (௩)

ஊனமராக்கையுடம்புதன்னை யுணரிற்பொருளன்று
தேனமர்கொன்றையினானடிக்கே சிறுகாலையேத்துமினோ
வானமனைத்துங்கொண்டாட்டுகந்த வடிகளிடம்போலும்
வானவர்நாடொறும்வந்திறைஞ்சும் வலம்புரநன்னகரே. (௪)

செற்றெரியுந்திரையார்கலுழிச் செழுநீர்கொளச்செஞ்சடைமே
லற்றறியாதனலாடுநட்ட மணியார்தடங்கண்ணி
பெற்றறிவாரெருதேறவல்ல பெருமானிடம்போலும்
வற்றறியாப்புனல்வாய்ப்புடைய வலம்புரநன்னகரே. (௫)

உண்ணவண்ணத்தொளிநஞ்ச முண்டுமையோடுடனாய்ச்
சுண்ணவண்ணப்பொடிமேனிபூசிச் சுடர்ச்சோதிநின்றிலங்கப்
பண்ணவண்ணத்தனபாணிசெய்யப் பயின்றாரிடம்போலும்
வண்ணவண்ணப்பறைபாணியறா வலம்புரநன்னகரே (௬)

புரிதருபுன்சடைபொன்றயங்கப் புரிநூல்புரண்டிலங்க
விரைதருவேழத்தினீருரி தோன்மேன்மூடிவேய்
புரைதோளரைதருபூந்துகிலா ரணங்கையமர்ந்தாரிடம்போலும்
வரைதருதொல்புகழ்வாழ்க்கையறா வலம்புரநன்னகரே. (௭)

தண்டணைதோளிருபத்தினொடுந் தலைபத்துடையானை
யொண்டணைமாதுமைதானடுங்க வொருகால்விரலூன்றி
மிண்டதுதீர்த்தருள்செய்யவல்ல விமலர்க்கிடம்போலும்
வண்டணைதன்னொடுவைகும்பொழில் வலம்புரநன்னகரே. (௮)

தாருறுதாமரைமேலயனுந் தரணியளந்தானுந்
தேர்வறியாவகையாலிகலித் திகைத்துத்திரிந்தேத்தப்
பேர்வறியாவகையானிமிர்ந்த பெருமானிடம்போலும்
வாருறுசோலைமணங்கமழும் வலம்புரநன்னகரே (௯)

காவியநற்றுவராடையினார்கடு நோன்புமேல்கொள்ளும்
பாவிகள்சொல்லைப்பயின்றறியாப்பழந் தொண்டருள்ளுருக
வாவியுணின்றருள்செய்யவல்ல வழகரிடம்போலும்
வாவியினீர்வயல்வாய்ப்புடைய வலம்புரநன்னகரே. (௧௦)

நல்லியலுஞ்ன்மறையோர்புகலித் தமிழ்ஞானசம்பந்தன்
வல்லியந்தோலுடையாடையினன் வலம்புரநன்னகரைச்
சொல்லியபாடல்கள்பத்துஞ்சொல்ல வல்லவர்தொல்வினைபோய்ச்
செல்வன்சேவடிசென்றணுகிச் சிவலோகஞ்சேர்வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வலம்புரநாதர் - தேவியார் - வடுவகிர்க்கணம்மை.

---

## இரண்டாந்திருமுறை.

### திருச்சாய்க்காடு - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மண்புகார்வான்புகுவர் மனமிளையார்பசியாலுங்
கண்புகார்பிணியறியார் கற்றாருங்கேட்டாரும்
விண்புகாரெனவேண்டா வெண்மாடநெடுவீதித்
தண்புகார்ச்சாய்க்காட்டெந் தலைவன்றாள்சார்ந்தாரே. (க)

போய்க்காடேமறைந்துறைதல் புரிந்தானும்பூம்புகார்ச்
சாய்க்காடேபதியாக வுடையானும்விடையானும்
வாய்க்காடுமுதுமரமே யிடமாகவந்தடைந்த
பேய்க்காடல்புரிந்தானும் பெரியோர்கள்பெருமானே. (உ)

நீநாளுநன்னெஞ்சே நினைகண்டாயாரறிவார்
சாநாளும்வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம்பெருமாற்கே
பூநாளுந்தலைசுமப்பப் புகழ்நாமஞ்செவிகேட்ப
நாநாளுநவின்றேத்தப் பெறலாமேநல்வினையே. (ங)

கட்டலர்த்தமலர்தூவிக் கைதொழுமின்பொன்னியன்ற
தட்டலர்த்தபூஞ்செருந்தி கோங்கமருந்தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்ததடந்தாழை முருகுயிர்க்குங்காவிரிப்பூம்
பட்டினத்துச்சாய்க்காட்டெம் பரமேட்டிபாதமே. (ச)

கோங்கன்னகுவிமுலையாள் கொழும்பணைத்தோட்கொடியிடையைப்
பாங்கென்னவைத்துகந்தான் படர்சடைமேற்பான்மதியந்
தாங்கினன்பூம்புகார்ச் சாய்க்காட்டான்றாணிழற்கீ
ழோங்கினரோங்கினரா னவுரைக்குமுலகமே. (ரு)

சாந்தாகநீறணிந்தான் சாய்க்காட்டான்காமனைமுன்
தீந்தாகமெரிகொளுவச் செற்றுகந்தான்றிருமுடிமே

லோய்ந்தாரமதிசூடி யொளிதிகழுமலைமகடோ
டோய்ந்தாகம்பாகமா வுடையானும்விடையானே. (௬)

மங்குறோய்மணிமாட மதிதவழுநெடுவீதிச்
சங்கெலாங்கரைபொருது திரைபுலம்புஞ்சாய்க்காட்டான்
கொங்குலாவரிவண்டி னிசைபாடுமலர்க்கொன்றைத்
தொங்கலானடியார்க்குச் சுவர்க்கங்கள்பொருளலவே. (௭)

தொடலரியதொருகணையாற் புரமூன்றுமெரியுண்ணப்
படவரவத்தெழிலாரம் பூண்டான்பண்டரக்கனையுந்
தடவரையாற்றடவரைத்தோ ளூன்றினான்சாய்க்காட்டை
யிடவகையாலடைவோமென் றெண்ணுவார்க்கிடரிலையே. (௮)

வையநீரேற்றானு மலருறையுநான்முகனு
மையன்மாரிருவர்க்கு மளப்பரிதாலவன்பெருமை
தையலார்பாட்டோவாச் சாய்க்காட்டெம்பெருமானே
தெய்வமாப்பேணாதார் தெளிவுடைமைதேறோமே. (௯)

குறங்காட்டுநால்விரற்கோ வணந்துக்கோலோவிப்போ
யறங்காட்டுஞ்சமணருஞ் சாக்கியருமலர்தூற்றுந்
திறங்காட்டல்கேளாதே தெளிவுடையீர்சென்றடைமின்
புறங்காட்டிலாடலான் பூம்புகார்ச்சாய்க்காடே. (௧௦)

நொம்பைந்துபுடைத்தொல்கு நூபுரஞ்சேர்மெல்லடியா
ரம்பந்தும்வரிக்கழலு மரவஞ்செய்பூங்காழிச்
சம்பந்தன்றமிழ்பகர்ந்த சாய்க்காட்டுப்பத்திவையு
மெம்பந்தமெனக்கருதி யேத்துவார்க்கிடர்கெடுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சாய்க்காடு - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நித்தலுந்நியமஞ்செய்து நீர்மலர்தூவிச்
சித்தமொன்றவல்லார்க் கருளுஞ்சிவன்கோயின்
மத்தயானையின்கோடும் வெண்பீலியும்வாரித்
தத்துநீர்ப்பொன்னி சாகரமேவுசாய்க்காடே. (௧)

பண்டலைக்கொண்டு பூதங்கள்பாடநின்றாடும்
வெண்டலைக்கருங் காடுறைவேதியன்கோயில்

கொண்டலைத்திகழ்பேரி முழங்கக்குலாவித்
தண்டலைத்தடமா மயிலாடுசாய்க்காடே. (உ)

நாறுகூவிளநாகிள வெண்மதியத்தோ
டாறுசூடுமமரர்பிரா னுறைகோயி
லூறுதேங்கனிமாங் கனியோங்கியசோலைத்
தாறுதண்கதலிப் புதன்மேவுசாய்க்காடே. (௩)

வரங்கள்வண்புகழ் மன்னியவெந்தைமருவார்
புரங்கண்மூன்றும் பொடிபடவெய்தவன்கோயி
லிரங்கலோசையு மீட்டியர்சாத்தொடுமீண்டித்
தரங்கநீள்கழித் தண்கரைவைகுசாய்க்காடே. (௪)

ஏழைமாதர்கடை தோறுமிடுபலிக்கென்று
கூழைவாளரவாட்டும் பிரானுறைகோயின்
மாழையொண்கண் வளைக்கைநுளைச்சியர்வண்பூந்
தாழைவெண்மடற் கொய்துகொண்டாடுசாய்க்காடே (௫)

தூங்கவானவர் சூழ்கடருங்கடைபோதி
லங்கோர்நீழ லளித்தவெம்மானுறைகோயில்
வங்கமங்கொளி ரிப்பியுமுத்துமாமணியுஞ்
சங்கும்வாரித் தடங்கடலுந்துசாய்க்காடே. (௬)

வேதநாவினர் வெண்பளிங்கின்குழைக்காத
ரோதநஞ்சணி கண்டருகந்துறைகோயின்
மாதர்வண்டுதன் காதல்வண்டாடியபுன்னைத்
தாதுகண்டுபொழி லின்மறைந்தாடுசாய்க்காடே (௭)

இருக்குநீள்வரை பற்றியடர்த்தன்றெடுத்த
வரக்கனாக நெரித்தருள்செய்தவன்கோயின்
மருக்குலாவிய மல்லிகைசெண்பகம்வண்பூந்
தருக்குலாவிய தண்பொழினீடுசாய்க்காடே. (அ)

மாலினோடயன் காண்டற்கரியவர்வாய்ந்த
வேலையார்விட முண்டவர்மேவியகோயில்
சேலினேர்விழி யார்மயிலாலச்செருந்தி
காலையேகன கம்மலர்கின்றசாய்க்காடே. (௯)

ஊத்தைவாய்ச்சமண்கையர்கள் சாக்கியர்க்கென்று
மாத்தமாகவறிவரிதா யவன்கோயில்
வாய்த்தமாளிகை சூழ்தருவண்புகார்மாடே
பூத்தவாவிகள்சூழ்ந்து பொலிந்தசாய்க்காடே. (௧0)

ஏனையோர்புகழ்ந்தேத்திய வெந்தைசாய்க்காட்டை
ஞானசம்பந்தன் காழியர்கோனவில்பத்து
மூனமின்றியுரைசெய்ய வல்லவர்தாம்போய்
வானநாடினிதாள்வரிம் மாநிலத்தோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - சாயாவனேசுவரா - தேவியார் - குயிலுநன்மொழியம்மை.

---

## திருவெண்காடு - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

கண்காட்டுநுதலானுங் கனல்காட்டுங்கையானும்
பெண்காட்டுமுருவானும் பிறைகாட்டுஞ்சடையானும்
பண்காட்டுமிசையானும் பயிர்காட்டும்புயலானும்
வெண்காட்டிலுறைவானும் விடைகாட்டுங்கொடியானே. (௧)

பேயடையாபிரிவெய்தும் பிள்ளையினோடுள்ளநினை
வாயினவேவரம்பெறுவ ரையுறவேண்டாவொன்றும்
வேயனதோளுமைபங்கன் வெண்காட்டுமுக்குளநீர்
தோய்வினையாரவர்தம்மைத் தோயாவாந்தீவினையே. (௨)

மண்ணொடுநீரனல்காலோ டாகாயமதியிரவி
யெண்ணில்வருமியமான னிகபரமுமெண்டிசையும்
பெண்ணினொடாண்பெருமையொடு சிறுமையுமாம்பேராளன்
விண்ணவர்கோன்வழிபடவெண் காடிடமாவிரும்பினனே. (௩)

விடமுண்டமிடற்றண்ணல் வெண்காட்டின்றண்புறவின்
மடல்விண்டமுடத்தாழை மலர்நிழலைக்குருகென்று
தடமண்டுதுறைக்கெண்டை தாமரையின்பூமறையக்
கடல்விண்டகதிர்முத்த நகைகாட்டுங்காட்சியதே. (௪)

வேலைமலிதண்கானல் வெண்காட்டான்றிருவடிக்கீழ்
மாலைமலிவண்சாந்தால் வழிபடுநன்மறையவன்றன்
மேலடர்வெங்காலனுயிர் விண்டபினைநமன்றூத
ராலமிடற்றானடியா ரென்றடரவஞ்சுவரே. (௫)

தண்மதியும்வெய்யரவுந் தாங்கினான்சடையினுட
னொண்மதியநுதலுமையோர் கூறுகந்தானுறைகோயில்
பண்மொழியாலவனாமம் பலவோதப்பசுங்கிள்ளை
வெண்முகில்சேர்கரும்பெணைமேல் வீற்றிருக்கும்வெண்காடே. (௬)

சக்கரமாற்கீந்தானுஞ் சலந்தரனைப்பிளந்தானு
மக்கரைமேலசைத்தானு மடைந்தயிராபதம்பணிய
மிக்கதனுக்கருள்சுரக்கும் வெண்காடும்வினைதுரக்கு
முக்குளநன்குடையானு முக்கணுடையிறையவனே. (௭)

பண்மொய்த்தவின்மொழியாள் பயமெய்தமலையெடுத்த
வுன்மத்தனுரநெரித்தன் றருள்செய்தானுறைகோயில்
கண்மொய்த்தகருமஞ்ஞை நடமாடக்கடன்முழங்க
விண்மொய்த்தபொழில்வரிவண் டிசைமுரலும்வெண்காடே. (௮)

கள்ளார்செங்கமலத்தான் கடற்கிடந்தானெனவிவர்க
ளொள்ளாண்மைகொளற்கோடி யுயர்ந்தாழ்ந்துமுணர்வரியான்
வெள்ளானைதவஞ்செய்யு மேதகுவெண்காட்டானென்
றுள்ளாடியுருகாதா ருணர்வுடைமையுணரோமே. (௯)

போதியர்கள்பிண்டியர்கண் மிண்டுமொழிபொருளென்னும்
பேதையர்களவர்பிறிமி னறிவுடையீரிதுகேண்மின்
வேதியர்கள்விரும்பியசீர் வியன்றிருவெண்காட்டானென்
றோதியவர்யாதுமொரு தீதிலரென்றுணருமினே. (௰)

தண்பொழில்சூழ்சண்பையர்கோன் றமிழ்ஞானசம்பந்தன்
விண்பொலிவெண்பிறைச்சென்னி விகிர்தனுறைவெண்காட்டைப்
பண்பொலிசெந்தமிழ்மாலை பாடியபத்திவைவல்லார்
மண்பொலியவாழ்ந்தவர்போய் வான்பொலியப்புகுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சுவேதாரணியேசுவரர் - தேவியார் - பிரமவித்தியாநாயகியம்மை.

---

திருமுல்லைவாயில் - பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

துளிமண்டியுண்டுநிறம்வந்தகண்ட னடமன்னுதுன்னுசுடரோ
னொளிமண்டியும்பருலகங்கடந்த வுமைபங்கனெங்களரனூர்
களிமண்டுசோலைகழனிக்கலந்த கமலங்கடங்குமதுவிற்
றெளிமண்டியுண்டுசிறைவண்டுபாடுந் திருமுல்லைவாயிலிதுவே. (௧)

பருவத்தில்வந்துபயனுற்றபண்ப னயனைப்படைத்தபரம
னரவத்தொடங்கமவைகட்டியெங்கு மாவிக்கநின்றவரனூ
ருருவத்தின்மிக்கவொளிர்சங்கொடிப்பி யவையோதமோதவெருவித்
தெருவத்தில்வந்துசெழுமுத்தலைக்கொ டிருமுல்லைவாயிலிதுவே. (௨)

வாராதநாடன்வருவார்தம்வில்லி னுருமெல்கிநாளுமுருகில்
லாராதவின்பனகலாதவன்ப னருண்மேவிநின்றவரனூர்
பேராதசோதிபிரியாதமார்பி னலர்மேவுபேதைபிரியா
டூராதகாதனெதிநேரநீடு திருமுல்லைவாயிலிதுவே. (௩)

ஒன்றொன்றொடொன்றுமொருநான்கொடைந்து மிருமூன்றொடே
ழுமுடனு, யன்றின்றொடொன்றுமறிவானவர்க்கு மறியாமைநின்றவர
னூர், குன்றொன்றொடொன்றுகுலையொன்றொடொன்று கொடியொ
ன்றொடொன்றுகுழுமிச், சென்றொன்றொடொன்று செறிவாய்நிறை
ந்த திருமுல்லைவாயிலிதுவே. (௪)

கொம்பன்னமின்னினிடையாளோர்கூறன் விடைநாளுமேறுகுழக
னம்பன்னெமன்பன்மறைநாவன்வானின் மதியேறுசென்னியரனூ
ரம்பன்னவொண்கணவராடரங்கி னணிகோபுரங்களழகார்
செம்பொன்னசெவ்விதருமாடநீடு திருமுல்லைவாயிலிதுவே. (௫)

ஊனேறுவேலினுருவேறுகண்ணி யொளியேறுகொண்டவொருவ
னானேறதேறியழகேறுநீற னரவேறுபூணுமவனூர்
மானேறுகொல்லைமயிலேறிவந்து குயிலேறுசோலைமருவித்
தேனேறுமாவின்வளமேறியாடு திருமுல்லைவாயிலிதுவே. (௬)

நெஞ்சாரநீடுநினைவாரைமூடு வினைதேயநின்றநிமல
னஞ்சாடுசென்னியரவாடுகைய னனலாடுமேனியரனூர்
மஞ்சாருமாடமனைதோறுமைய முளதென்றுவைகிவரினுஞ்
செஞ்சாலிநெல்லின்வளர்சோறளிக்கொ டிருமுல்லைவாயிலிதுவே. ௭

வரைவந்தெடுத்தவலிவாளரக்கன் முடிபத்துமிற்றுநெரிய
வுரைவந்தபொன்னினுருவந்தமேனி யுமைபங்கனெங்கள்பரனூர்
வரைவந்தசந்தோடகிலுந்திவந்து மிளிர்கின்றபொன்னிவடபாற்
றிரைவந்துவந்துசெறிதேறலாடு திருமுல்லைவாயிலிதுவே. (௮)

மேலோடிநீடுவிளையாடன்மேவு விரிநூலன்வேதமுதல்வன்
பாலாடுமேனிகரியானுமுன்னி யவர்தேடநின்றபரனூர்

காலாடுநீலமலர்துன்றிநின்ற கதிரோறுசெந்நெல்வயலிற்
சேலோடுவாளைகுதிகொள்ளமல்கு திருமுல்லைவாயிலிதுவே. (கூ)

பனைமல்குதிண்கைமதமாவுரித்த பரமன்னநம்பனடியே
நினைவன்னசிந்தையடையாததேர ரமண்மாயநின்றவரனூர்
வனமல்குகைதைவகுளங்களெங்கு முகிளங்களெங்குநெரியச்
சினைமல்குபுன்னைதிகழ்வாசநாறு திருமுல்லைவாயிலிதுவே. (க0)

அணிகொண்டகோதையவணன்றுமேத்தவருள்செய்தவெந்தைமருவா
திணிகொண்டமூன்றுபுரமெய்தவில்லி திருமுல்லைவாயிலிதன்மேற் [ர்
றணிகொண்டசிந்தையவர்காழிஞான மிகுபந்தனொண்டமிழ்களி
னணிகொண்டபத்துமிசைபாடுபத்த ரகல்வானமாள்வர்மிகவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-முல்லைவனநாதர்-தேவியார்-கோதையம்மை.

---

## மூன்றாந் திருமுறை.

### திருமயேந்திரப்பள்ளி - பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்.

திரைதருபவளமுஞ் சீர்திகழ்வயிரமுங்
கரைதருமகிலொடு கனவளைபுகுதரும்
வரைவிலாலெயிலெய்த மயேந்திரப்பள்ளியுள்
ளரவரையழகனை யடியிணைபணிமினே. (க)

கொண்டல்சேர்கோபுரங் கோலமார்மாளிகை
கண்டலுங்கைதையுங் கமலமார்வாவியும்
வண்டலாம்பொழிலணி மயேந்திரப்பள்ளியிற்
செண்டுசேர்விடையினான் றிருந்தடிபணிமினே. (உ)

கோங்கிளவேங்கையுங் கொழுமலர்ப்புன்னையுந்
தாங்குதேன்கொன்றையுந் தகுமலர்க்குரவமு
மாங்கரும்பும்வயன் மயேந்திரப்பள்ளியுள்
ளாங்கிருந்தவன்கழ லடியிணைபணிமினே. (ங)

வங்கமார்சேணுயர் வருகுறியான்மிகு
சங்கமாரொலியகிற் றருபுகைகமழ்தரும்
மங்கையோர்பங்கினன் மயேந்திரப்பள்ளியுள்
செங்கணாயகன்றன திணையடிபணிமினே. (ச)

நித்திலத்தொகைபல நிரைதருமலரொளச்
சித்திரப்புணரிசேர்த் திடத்திகழ்ந்திருந்தவன்
மைத்திகழ்கண்டனன் மயேந்திரப்பள்ளியுட்
கைத்தலமழுவனைக் கண்டடிபணிமினே (ரு)

சந்திரன்கதிரவன் றகுபுகழயனொடு
மிந்திரன்வழிபட விருந்தவெம்மிறையவன்
மந்திரமறைவளர் மயேந்திரப்பள்ளியு
ளந்தமில்லழகனை யடிபணிந்துய்ம்மினே (சு)

சடைமுடிமுனிவர்கள் சமைவொடும்வழிபட
நடநவில்புரிவின னறவணிமலரொடு
படர்சடைமதியினன் மயேந்திரப்பள்ளியு
ளடல்விடையுடையவ னடிபணிந்துய்ம்மினே. (எ)

சிரமொருபதுமுடைச் செருவலியரக்கனைக்
கரமிருபதுமிறக் கனவரையடர்த்தவன்
மரவமர்பூம்பொழின் மயேந்திரப்பள்ளியு
ளரவமர்சடையனை யடிபணிந்துய்ம்மினே. (அ)

நாகணைத்துயில்பவன் னலமிகுமலரவ
னாகணைந்தவர்கழ லணையவும்பெறுகிலர்
மாகணைந்தலர்பொழின் மயேந்திரப்பள்ளியுள்
யோகணைந்தவன்கழ லுணர்ந்திருந்துய்ம்மினே. (கூ)

உடைதுறந்தவர்களு முடைதுவருடையரும்
படுபழியுடையவர் பகர்வனவிடுமினீர்
மடைவளர்வயலணி மயேந்திரப்பள்ளியு
ளிடமுடையீசனை யிணையடிபணிமினே. (க0)

வம்புலாம்பொழிலணி மயேந்திரப்பள்ளியு
ணம்பனூர்கழலடி ஞானசம்பந்தன்சொ
னம்பரமிதுவென நாவினுனவில்பவ
ரும்பராரெதிர்கொள வுயர்பதியணைவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-திருமேனியழகர்-தேவியார்-வடிவாம்பிகையம்மை.

